


# காலம் மிகமிகக் குறுகியது!

ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்

புது இலக்கியப் பதிப்பகம்

# காலம் மிகமிகக் குறுகியது !


ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்

தமிழாக்கம் :

வை. சாம்பசிவம்





புது இலக்கியப் பதிப்பகம்

61, தம்பு செட்டித்தெரு, சென்னை-1.

# அறிமுகம்

ஐன்ஸ்டீன் பூத பௌதிக விஞ்ஞான உலகின் தலையாய மேதை என்பது மட்டுமல்ல, இந்த இருபதாம் நூற்றுண்டு தந்த உலகமே கண்டிராத ஒப்பற்ற அறிவுஞான மேதை. நியூடன், கலிலியோ, கோப்பர்நீகஸ் போன்ற உலக மேதைகளின் வரிசையில் முதல் இடம் பெறுபவர்.

இந்த 20ஆம் நூற்றுண்டின் அறிவு வளர்ச்சிக்கு ஐன்ஸ்டீனைப் போன்று வேறு எந்த தனி மனிதனும் அவ்வளவு பாடுபட்டது கிடையாது; இனி பாடுபடவும் முடியாது.

உலக ஏகாதிபத்தியப் போரையும், பாசிசப் போரையும் கண்ட இந்நிலவுலகில் ஐன்ஸ்டீன் சிறந்த மனிதாபிமானியாகத் திகழ்ந்து போரற்ற உலகுக்கும் – சாந்தி சமுதாயத்திற்கும் தன்னையே ஈடுபடுத்திக் கொண்டவர்.

இந்த 20ஆம் நூற்றுண்டின் அணுயுகத்தில் தனி மனிதனைும் எவ்வளவோ மாபெரும் காரியங்களைத் தன் ஆக்க சக்தியால் செயலாற்ற முடியும் என்பதற்கு இவரே ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

அகண்ட அறிவு ஞானியான, நோபெல் பரிசு பெற்ற ஐன்ஸ்டீன் அடக்கமே உருவானவர்.

புது இலக்கியப் பதிப்பகத்தார்.

— 'சிறுவயதில் ஐன்ஸ்டீன்'

என்ற நூலின் பதிப்புரையில்.

# பதிப்புரை

*1914–18ஆம் ஆண்டு உலகப் பெரும் போர் முடிந்த மறு ஆண்டு ஐன்ஸ்டீன் கண்டுபிடித்த 'சார்புக் கொள்கை' (Relativity Theory) உலகிற்கு வெளியாகியது.*

அந்தப் பேருண்மையைக் கண்டுபிடித்த ஐன்ஸ்டீனே 'அணுவில் அடங்கியுள்ள பேராற்றலைக் கொண்டு உலகினையே அழித்து விடலாமென்று உணரத் தலைப்பட்டதுமே' அவர் முற்றிலும் வேதனைப்படலானார்.

ஒரு சமயம் ஒருவன் அவரிடம் வந்து இந்த உலகினை அழிக்க ஒரு குண்டு செய்ய அவர் உதவியை வேண்டி நின்றான். இதனைக் கேட்ட மாத்திரத்திலேயே அவர் வெகுண்டு அவனை வைது விரட்டியடித்தார். அவனிடம், "என்னோடு விவாதிக்காதே! என்ன செய்யமுடியும்! என்ன செய்ய முடியாது! என்று எனக்குச் சொல்ல முற்படாதே. அழிவு வேலைக்கு, வெடி குண்டு செய்வதற்கு என்னுடைய கண்டுபிடிப்பு ஒருக்காலமும் பயன்படுத்தப்படக்கூடாது. அப்படிச் செய்ய அனுமதிக்க மாட்டேன்" என்று கதறினார்.

"அணுவில் அடங்கியுள்ள பேராற்றலைப் பிரித்து வெளிக்குக் கொண்டுவரக் கூடாது. அது வெறும் தத்துவ அளவுக்கு மேல், அதனை

சோதனையிடக் கூடாது" என்று போர் வெறி கொண்ட இந்தப் பித்தர் உலகைக் கண்டு கதிகலங்கிக் கதறினர்.

அவர் அணு சக்தியை ஆக்க வேலைக்கு அளவற்றுப் பயன்பட முழுமூச்சோடு பணியாற்றினர். அதில் மகத்தான வெற்றியும் கண்டார்.

அவர் தன் வாழ்நாளில் ஏராளமான விஞ்ஞானக் கட்டுரைகளை எழுதி இருக்கிறார். அவற்றைப் பாமர மக்கள் எளிதில் படித்து உணர முடியாது. இத்தகையவர் அனைவரும் தெரிந்து கொள்ளத்தக்க போற்றத் தகுந்த உண்மைகளையும் வெளியிட்டிருக்கின்றார். அவைகளின் சிறு தொகுப்பே இந்நூல்.

இதில் உள்ள கட்டுரைகளை அரிதில் தேடி அதனை நல்ல தமிழில் வடிவாக்கித் தந்த திரு. வை. சாம்பசிவம் அவர்களுக்குத் தமிழ் உலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

இனி வாசகர்கள் படித்துப் பயன்பெற வேண்டுகிறோம்.

சென்னை,
25-11-65.

எஸ். வி. சபாபதி
புது இலக்கியப் பதிப்பகம்

## உள்ளுறை

# என் நம்பிக்கை

நாம் இந்த உலகில் ஒரு வேடிக்கையான நிலைமையில் வந்து நிற்கிறோம். ஏன் என்ற காரணத்திற்கு விளக்கம் கிடைக்காத வகையிலே நாம் ஒவ்வொருவரும் சிறிது காலம் வருகிறோம்; செல்கிறோம். சில சமயம், இப்படிப் பட்ட வருகையும் செல்வதும் ஏதோ தெய்வீகச் செயல் என்றும் கருதப்படுகிறது.

நடைமுறை வாழ்விலிருந்து ஒன்றை மட்டும் நாம் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடிகிறது; மனிதன் மற்ற மனிதர்களுக்காகவே இங்கு வந்திருக்கிறான்; வேறெவரையும்விட, யாருடைய அன்பும் அரவணைப்பும் அவனுடைய இன்பவாழ்விற்கு அடிப்படையாகிறதோ, இதய ஈரத்தின் காரணத்தால் எந்த அன்புள்ளங்களோடு அவன் உறவுகொள்ள வேண்டியிருக்கிறதோ அவர்களுக்காகவே அவன் இங்கு வந்திருக்கிறான்; வாழ்கிறான் என்பதுதான்.

என்னுடைய அகவாழ்வும் புறவாழ்வும் எத்தனை பேருடைய உழைப்பால் உருவாகியவை என்பதை நாள்தோறும் எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது ; நான் ஏற்றுக்கொண்ட அந்த உழைப்பிற்கு ஈடுசெய்ய வேண்டுமானால் நான் எவ்வளவு கடுமையாக உழைக்க வேண்டும் என்பதையும் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியாது. மற்ற மனிதர்களுடைய உழைப்பை அதிக அளவிலே ஏற்றுக்கொண்ட காரணத்தால், கடன்பட்டவனாகிவிட்டேன் என்ற எண்ணம் என் நெஞ்ச அமைதியையே அடிக்கடி குலைக்கிறது.

தத்துவ அடிப்படையில் கூற முற்பட்டால் நாம் எந்த வகையிலும் விடுதலையுண்ட வாழ்வு வாழ்கிறோம் என்பதிலோ —வாழமுடியும் என்பதிலோ எனக்கு நம்பிக்கையில்லை. புறச் சூழ்நிலையின் நெருக்கடிக்கு அடிமைப்பட்டும் அக உணர்வால் தூண்டப்பட்டுமே நாம் செயல்படுகிறோம். ஸ்கோபன்ஹோவர் கூறியது போல, “ மனிதன் எண்ணியதை நிச்சயமாகச் செய்ய முடியும் ; ஆனால் எதைத்தான் எண்ண வேண்டும் என்பதை மட்டும் அவனால் முடிவுகட்ட முடியாது.” இந்தக் கருத்து இளமையிலிருந்தே என் நெஞ்சில் ஊறிப் பதிந்துவிட்ட ஒன்று. என் வாழ்வில் அல்லலும் அவதியும் எதிர்ப்பட்ட போதெல்லாம் ஆறுதல் தந்து அமைதி செய்ததும் அந்த பொருள் நிறைந்த சொற்றொடர்தான். அது பொறுமையின் பிறப்பிடம் ; வளர்ப்பிடமும்

கூட. எதற்குமே அதிகக் கவலைப்படவேண்டாம் என்று அது உபதேசிக்கிறது; எதையுமே சிரித்த படி வரவேற்கவேண்டும் என்பதைக் கூருமல் கூறுகிறது.

ஒருவன் இங்கு ஏன் நிலைத்து வாழ்கிருன் என்ற 'விசாரத்தி'ல் மூழ்கிக் கிடப்பதோ, அல்லது வாழ்வின் குறிக்கோளும் விளக்கமும் என்ன என்பதைப் பற்றிய கவலையில் ஆழ்ந்து கிடப்பதோ என்னைப் பொறுத்த மட்டிலும் அர்த்தமற்றது. இருந்தபோதிலும், ஒவ்வொரு வனும் தனக்கென சில கருத்துக்களைக் கொண் டிருக்கிருன்; அவற்றின் அடிப்படையில்தான் அவனுடைய குறிக்கோளும் அமைகிறது; அதனை யொட்டியே எதையும் அவன் மதிப்பிடுகிருன். அவ்வகையில் என்னேடு உறவுகொண்டு எனக்கு உள்ளக் களிப்பூட்டும் கருத்துக்கள் நன்மை, அழகு, உண்மை என்பனவாகும்.

வாழ்வை வசதியும் மகிழ்ச்சியும் உடைய தாக்கிக் கொள்ளவேண்டும் என்பதில் எனக்கு அக்கறையும் இல்லை; ஆவலும் இல்லை. வசதி யும் மகிழ்ச்சியுமே வாழ்வின் குறிக்கோள் எனக் கருதும் எந்தக் கோட்பாடும் மாக்கள் இனத் திற்கு மட்டுமே பொருத்தமானது என்பதுதான் என் கருத்து.

கலைத் துறையிலும் அறிவியல் வகையிலும், கனவிலும் தோன்ருதச் சாதனைகளைப் பெற் றெடுப்பதிலே, என்னைப் போன்ற **உணர்வு**

கொண்டவர்களோடு ஒன்றுபட்டு உழைக் கிறேன். அப்படி இடையறாது ஒன்றுபட்டு உழைக்க வேண்டும் என்ற உள்ள உணர்வு இல்லாதிருந்தால், என் வாழ்வு பொருளற்றதும் பொருண்மையற்றதும் ஆகியிருக்கும்.

மனித முயற்சிக்கும் ஆசைக்கும் ஒரு வரம்பு போட்டு வேலியிட்டுத் தடுப்பதை இளமை முதற் கொண்டே வெறுப்பவன் நான். உடைமையில் நாட்டமோ, வீண் விளம்பரமோ, ஆடம்பர வாழ்வோ எனக்கு ஈடுபாடு உடையவையல்ல. எளிய, அதிகக் கவலைப்படாத வாழ்வே ஒவ் வொருவருக்கும் நன்மையளிப்பது; ஆம். அதுவே அகத்திற்கும் உடலுக்கும் நன்மையளிப் பதுவாகும்.

நான் சமுதாய நீதியிலும் சமுதாயப் பொறுப்புணர்ச்சியிலும் அதிக அக்கறையுடை யவன். அப்படியிருந்தும் சமுதாயத்தின் அடிப் படைக் கூறுகளான ஆண் பெண்களோடு நேரடி யான – நெருங்கியத் தொடர்பு கொள்ள விருப்பம் அற்றவனாக இருக்கிறேன். இது ஒரு வேடிக்கையான முரண்பாடுதான். நான் ஒற்றைச் சேணம் போட்ட குதிரை என்பது உண்மை. குறிப்பிட்ட ஒரு வேலைக்காக தயாராகி நிற்கிறேன். அதனால், கூடி வேலை செய்யும் பண்பு எனக்கு இல்லை என்பதோ, அதற்கு நான் ஒருப்படாதவன் என்பதோ உண்மையல்ல.

இன்ஞென்றையும் நான் தெளிவாகக் கூறத் தான் வேண்டும். நான் எந்த ஒரு நாட்டுக்கோ, அரசுக்கோ, குறிப்பிட்ட சில நண்பர்களின் குழு விற்கோ – ஏன் – என் குடும்பத்திற்கோ கூட முழுக்க முழுக்க உரியவஞக இருந்ததில்லே. இந்தத் தொடர்புகள் யாவற்றிலும் ஏதோ ஒருவகைத் தொடர்பற்ற நிலேயும் உடனிருந்த படியே இருந்தது; காலம் செல்லச் செல்ல எனக்குள் நானே மூழ்கி வேலேயில் ஈடுபடும் நிலேக்கு வந்துவிட்டேன்.

சில சமயங்களில், அப்படி ஒதுங்கி நின்று விட்ட நிலேமை ஒருவித கசப்புணர்வைத் தரு கிறது. இருந்த போதிலும், மற்றவர்கள் என் ஊேப் புரிந்துகொள்ள முடியாத வகையில் – அவர் களுடைய அன்பை ஆதரவைப் பெற முடியாத வகையில் ஒதுங்கிவிட நேர்ந்து விட்டதற்காக நான் வருத்தப்படவில்லே. இதஞல் நான் இழந் தவை சில உண்டு. அந்த இழப்புகள் யாவும் வேறு வகையில் ஈடு செய்யப்பட்டுவிட்டன. மற்றவர்கள் கொண்டிருந்த பழக்க வழக்கங்கள், ஏற்றுக்கொண்டிருந்த கருத்துக்கள்; தவருன எண்ணங்கள் ஆகியவற்றிற்கும் எனக்கும் தொடர்பில்லாமல் போய்விட்டன. மாறும் தன்மை வாய்ந்த இப் பழக்க வழக்கங்கள், கருத் துக்கள், எண்ணங்கள் ஆகியவற்றின் அடிப்படை யில் ஏற்படும் மன வேதனேகளிலிருந்தும் நான் விடுபட்டு நின்றேன்.

அரசியல் துறையில் எனக்கு ஏற்புடைய கருத்து மக்களாட்சிதான். ஒவ்வொருவனும் மனிதன் என்ற அளவில் சமுதாயத்தில் மதிக்கப் படவேண்டும்; ஆனால் வழிபாட்டுக்குரிய உருவ மாக்கப்படக் கூடாது. அளவுக்கு அதிகமான மதிப்பும் பெருமையும் ஏற்றி என்னை மற்றவர் கள் பாராட்டுவதும் போற்றிப் புகழ்வதும் வேடிக்கையான நிலைமை என்றே கருதுகிறேன். என்னுடைய குறைந்த அறிவாற்றலைக் கொண்டு கண்டறிந்து தந்த சில கருத்துக்களைப் புரிந்து கொள்ள முயன்று, அது முடியாமற்போன குறையின் காரணத்தால்தான் அவர்கள் அப்படி என்னைப் பாராட்டுகிறார்கள் என்று நினைக் கிறேன்.

எந்த ஒரு குறிப்பிட்ட இலட்சியத்தை அடையவேண்டுமானாலும், ஆழ்ந்தெண்ணுவது, தெரிந்து செயல்பட வைப்பது, பெரும் பகுதி யான பொறுப்புகளைச் செய்து முடிப்பது என் பவையெல்லாம் ஒரு தனி மனிதனுடையன வாகவே இருக்கமுடியும் என்பதை நான் தெளிய உணர்கிறேன். ஆனால் வழிகாட்டப்படுபவர்கள் ஆட்டு மந்தையாக்கப்படக் கூடாது; வழி காட்டும் – செயல்பட வைக்கும் தலைவனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு, அவர்களுடைய தாகவே இருக்கவேண்டும்.

சமுதாயத்தில் காணப்படும் வர்க்கங்கள் யாவும் உண்மையானவையல்ல; சற்று ஆழ்ந்

தெண்ணிப் பார்த்தால் அவை யாவும் வன் முறையால் உருவாக்கி நிறுத்தப்பட்டுள்ளவை என்பது தெரியும். வன்முறையின் விளைவு சீர்கேடுதான் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை; ஏனென்ருல், வன்முறைக்கு வழிகோலுபவர்கள் நெறிகெட்டவர்களே. கொடுங்கோலர்களின் பட்டியலில் முதல்வரிசை யில் நின்றவர்களை வென்று ஆதிக்கத்தை நிலைநாட்டியவர்கள்கூட யோக்கியர்கள் என்று வரலாறு எடுத்துக்காட்டவில்லை.

இந்தக் காரணத்தாலேயே, இன்று இரஷ்யா விலும், ஜெர்மனியிலும், இத்தாலியிலும் நிலை பெற்றுள்ளது போன்ற படையாட்சிகளுக்கு நான் என்றென்றுமே எதிரியாக நிற்கிறேன். ஐரோப்பிய மக்களாட்சி முறை இன்று பொது வாகவே அவமதிப்புக்கு உள்ளாகி நிற்கிறது. அதற்குக் காரணம் சிலர் குறிப்பிடுவது போல மக்களாட்சியைப் பற்றிய அடிப்படைக் கருத் திலே உள்ள குறையல்ல; நிலையற்ற அரசியல் தலைமையும் தனி மனிதனைப் புறக்கணிக்கும் தன்மையுடைய கட்சி அமைப்புமே காரண மாகும்.

நம்முடைய ஆரவார வாழ்விற்கிடையிலே உண்மையான மதிப்பூட்டப்பட வேண்டியது ‘அரசு’ அல்ல; மனிதனுடைய தனித்தன்மை யும் உள்ளாற்றலுமேயாகும். மக்களின் பெரும் பகுதி உணர்ச்சியற்றும் சிந்தனையிழந்தும் கிடக்

கும் போது எந்த மனிதனுடைய தனித்தன்மை, பெருமையும் பெருமதிப்பும் உடையவற்றைப் படைக்கின்றதோ அதனையே பெரிதும் மதிக்க வேண்டும்.

இந்தப் பொருள் பற்றி எண்ணும்போதே செம்மறியாட்டுக் கூட்டமென இயங்கும் போர்ப் படை என் அகக் கண்ணின் முன்பு நிற்கிறது. போர்ப் பறையைக் கேட்டபடி சாரையிட்டு நடப்பதிலே மகிழ்ச்சி கொள்ளும் மனிதன் மதிக்கப்பட வேண்டியவன் அல்ல. என்னைப் பொறுத்த மட்டிலும் அருவருப்புக்குரியவன்; அவனுக்கு மூளை என்ற ஒன்று தேவையே இல்லை; தவறுதலாக அவனுக்கு அது தரப்பட்டு விட்டது. முதுகெலும்பு மட்டுமே அவனுக்குப் போதியது என்பது என் முடிவான கருத்து. ஆணைக்குத் தலைகுனிந்து செய்யும் அந்த வீரச் செய்கை, அறிவற்ற தன்மையால் புரியப்படும் வன்செயல்கள், நாட்டுப் பற்று என்ற போர்வை யின் கீழ் மறைக்கப்படும் பழிசார்ந்த பெரும் பேச்சுக்கள் – அவ்வளவையும் நான் அறவே வெறுக்கிறேன்.

போரிடுவது என்பது புன்மையிலும் புன்மை யானது; அருவருக்க வேண்டியவற்றுள்ளும் மிக மோசமானது. நான் இத்தகைய இழி செயல்களில் பங்கு கொள்பவனாக இருப்பதை விட ஆயிரம் துண்டுகளாக வெட்டுண்டு அழி வதையும் ஏற்றுக் கொள்வேன்.

இப்படிப்பட்ட மாசும் தூசும் மனித சமுதாயத்தின் மீது இல்லாதபடி உடனடியாகத் துடைத்தெறியப்படவேண்டும். மனித இயல்பை எண்ணிப் பார்க்கும்போது அது எப்போதோ துடைத்தெறியப் பட்டிருக்கவேண்டும். ஆனல் அறிவூட்டப் பிறந்தவை எனப்படும் கல்விக் கூடங்களும் மற்ற மற்ற ஏடுகளும் (அரசியல் வாணிக காரணங்களுக்காக) அந்தந்த நாட்டு அரசுகளின் பொதுஅறிவைச் சீரழித்துவிட்டன; அதன் விளைவாலேயே இந்த மாசு இதுவரை நிலைபெற்றிருக்க முடிந்தது.

புரிந்துகொள்ள முடியாத – திகைப்பூட்டும் நிலைமை, நம் அனுபவத்திற்கு உட்பட்ட ஒரு வகை இன்ப நிலைமையாகும். உண்மையான கலைக்கும் அறிவியலுக்கும் அப்படிப்பட்ட நிலைமையே அடிப்படையானது. இத்தகைய தொரு உணர்ச்சிக்கு ஆட்படாதவன் – ஒருக் கணம் வியப்பால் வாய்பிளந்து நிற்காதவன் – திகைப்பெய்தி சிந்தனையில் ஆழ்ந்திடாதவன் செத்தொழிந்தவன் என்றே கூறப்படவேண்டும்; ஆம். அவன் கண்களிருந்தும் குருடனே. வாழ்வில் எதிர்ப்படும் திகைப்பூட்டும் நிகழ்ச்சிகளைப் பற்றிய எண்ணம், ஓரளவு அச்சத்தோடு உறவு கொண்டுதான் மதத்திற்கு அடிக்கல் நாட்டிற்று: நமது அறிவாற்றலால் உணர்ந்துகொள்ள முடியாதது இருக்கத்தான் செய்கிறது; அதுவே பேரழகும் பேரறிவுமாகி நம் முன்பு நிற்கிறது; மிக மிகப் பொதுப்படையான அளவில் கூட

அதனைப் பற்றி நாம் அறியும் திறனற்றவர் களாகி திகைக்கிறோம் — இப்படிப்பட்ட ஒரு உள்ளுணர்வைத் தருவதுதான் உண்மையான மதத்தின் அடிப்படையான கருத்தாகும். இந்தக் கருத்தில்தான் — இந்த ஒரே கருத்தில் தான் நான் தலைசிறந்த மதவாதிகளின் பட்டியலைச் சேர்ந்தவன் என்று கூறிக்கொள்ள விரும்பு கிறேன்.

இதை விடுத்து, மனித சிறுமையின் பிரதி பலிப்பாகவும் — நம்மைப் போன்றே சில பல குறிக்கோள்களை உட்கொண்டதாகவும் உள்ள ஒரு கடவுளை — அதுவும் தன் படைப்புக்களைத் தானே தண்டனைக்குள்ளாக்கியும் பாராட்டுக் குப் பாத்திரமாக்கியும் விளையாடும் கடவுளை நான் கற்பனை செய்தும் காண முடியாது. அச்சத்தின் காரணத்தாலோ, ஆழ்ந்துணர்ந்து விட்டோம் என்ற தற்பெருமையாலோ உறுதி யற்ற சில 'ஆத்மா'க்கள் நம்புவதைப் போல, 'ஒருவன்' இறப்பின் பின்னரும் இருக்கிறான்; இயங்குகிறான் என்றும் நான் நம்பமுடியவில்லை. தெரிந்த வாழ்வில் எதிர்ப்படும் திகைப்பூட்டும் நிகழ்ச்சிகளைப் பற்றி ஆழ்ந்தெண்ணுவதும் — வியப்பூட்டும் வகையிலே அமைப்புற்று நிற்கும் பேரண்டத்தைப் பற்றி சிந்திப்பதும் — இயற்கை யோடு கலந்துறவாடும் அறிவியக்கத்தில் அணுக் கூறு அளவாகிலும் புரிந்து உணர்ந்துகொள்ள முயற்சிப்பதுமே எனக்குப் போதும்.

## மீண்டும் எண்ணினுல் (Postscript)

எப்போதோ எழுதிய இந்த வரிகளை மீண்டும் இப்போது படிக்கும்போது, ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரண்டு கருத்துக்கள் எனக்குத் தோன்றுகின்றன. அன்று நான் எழுதியது, இன்றும் அடிப்படையில் உண்மையாகவே இருக்கிறது; இருப்பினும் அவையெல்லாம் ஏதோ புதியன போன்றும் தள்ளிப்போனவைப் போலும் தோன்றுகின்றன. அது எப்படி இருக்க முடியும்? அல்லது நான்தான் வயதால் முதிர்வடைந்து அனைத்தையும் குறைந்த ஒளியிலே மாறுதல் உடையவைகளாகக் காண்கிறேனு? இடையிலே கடந்துபோன சில ஆண்டுகாலம் என்பது மனித இன வரலாற்றிலே எந்த அளவானது? இந்தக் குறுகிய காலத்தை அதனேடு ஒப்புநோக்கிப் பார்க்கும்போது, மனித வாழ்வை நிர்ணயிக்கும் வகையில் தோன்றி மறைந்த சக்திகள் யாவும் மிக மிக அற்பமானவை தானே? இந்த சில ஆண்டுகளிலே ஏற்பட்ட உடலியல் மாற்றத்தின் அடிப்படையில் என்னுடைய பகுத்தறியும் ஆற்றலும் மாறுதலுக்கு உட்பட்டதால், என் கருத்திலும் மாறுதல் ஏற்பட்டுள்ளதா? வாழ்க்கையைப் பற்றிய பொதுவான பிரச்சினைகளை உணர்ச்சியின் அடிப்படையில் மாறுபடக் காணும்போது, மேற்சொன்ன வினுவிடைகள்

விளக்கம் தரமுடியாது. என்னுடைய புறச் சூழ்நிலைகளிலிருந்தும் இத்தகைய மாற்றத்திற் கான காரணங்களைக் கண்டறிய முடியாது. ஏனென்றால் அவைகளெல்லாம், என்னுடைய எண்ணங்களுக்கும் உணர்வுக்கும் தலைதாழ்ந்து அடுத்த படியிலே நின்றனவே அன்றி தலை தூக்கியதில்லை.

உண்மையில், இதுவரை இல்லாத – முற்றி லும் வேறுபட்ட ஒன்று இப்போது ஈடுபட் டுள்ளது. ஆம். இந்த மிகக் குறுகிய காலத் திற்குள், நிலையானது என்பதில் இருந்த நம்பிக்கை – சிறப்பாக மனித சமுதாயம் நிலையானதாக இருக்கும் என்பதில் இருந்த நம்பிக்கை பெரிதும் அழிந்துவிட்டது. இன்று, மனித சமுதாயத்தின் பண்பாட்டுப் பாரம்பரி யம் மட்டும்தான் அழிந்துவிடும் என்பதை உணர்வதோடு, இன்னொன்றையும் காண முடி கிறது. அதாவது, எல்லாவற்றிற்கும் கீழாக வைத்து மதிப்பிட வேண்டியது அனைத்திற்கும் மேலாக வைக்கப்பட்டு, அதனைக் காக்கும் வகை யில் எதனையும் இழக்கலாம் என்ற நிலைமை தோன்றியிருக்கிறது.

அறிவுள்ள மனிதன் எவனும் வாழ்வை எதிர்பாராமல் கிட்டிய அதிர்ஷ்டப் பொருள் என்று கருதி அதனை இறப்பிலிருந்து மீட்கவும் முயன்றிருக்கிறான். வாழ்வைத் தொடும் ஆபத் துக்களில் பல புறத்தே இருந்து நேருபவை;

மாடியிலிருந்து விழுந்து மண்டை உடையலாம், யாரோ செய்த குற்றத்திற்காக வாழ்விழந்து போகலாம்; அறியாமையால் அவலத்திற்கு ஆளாகலாம்; அவதூறுக்கு ஆளாகி அழியவும் நேரலாம். மனித சமுதாய வாழ்வு என்பதே ஆபத்துக்கள் பலவற்றின் கூட்டுச் சரக்கு என்ற அளவில்தான் உள்ளது. ஆனுல் அப்படிப்பட்ட ஆபத்துக்கள் இயற்கையின் கோளாறிஞல் என் றென்றே தோன்றுபவை; எதிர்பார்க்கப்படா தவையுங்கூட. மொத்தத்தில் எண்ணிப் பார்த் தால், இவ்வளவுக்கு இடையிலும், மனித சமு தாயம் நிலையானதுதான் என்று கருத முடிந் தது. விருப்புகளைப் பற்றியும் அறநெறிகளைப் பற்றியும் சமுதாயத்தில் நிலவிய கருத்துக்களை வைத்துக் கணக்கிட்டால் சமுதாயம் குறை வுடையது என்பதை எவரும் மறுக்க முடியாது. இவ்வளவு குறைபாடுகளுக்கும் பலவகை ஆபத் துகளுக்கும் இடையிலுங்கூட ஒருவன் நிம்மதி கொள்ள முடிந்தது. இவையெல்லாம் சுவா சிக்கக் கிடைக்கும் காற்றைப் போல இயல் பானது என்றே கருதினுன். விருப்பத்திற்கும், ஒழுக்கத்திற்கும், நடைமுறை உண்மைகளுக்கும் கட்டப்பட்ட வரம்புகள் கூட பாரம்பரியமாக வந்தவை; மனித நாகரிகத்தின் பொதுத் தேவை என்றே கருதி மதிக்கப்பட்டன.

இப்படிப்பட்ட பாதுகாப்பு உணர்ச்சியை, உலகப்போர் முன்னமே உலுக்கி அலைக்கழித் தது. வாழ்வின் புனிதத்தன்மை அழிந்தொழிந்

தது. தனியொருவன் அவன் விரும்பியதைச் செய்யவோ நினைத்த இடத்திற்குச் செல்லவோ கூட முடியாதபடி செய்தது. அரசியல் இயந்திரத்தின் இயக்கத்தில் பொய்க்கு மகத்தான மதிப்பு அளிக்கப்பட்டது. அப்போதுங்கூட போர் ஒரு புற விளைவு – மனிதன் எண்ணித் திட்டமிட்டுச் செய்துவிட்ட விபரீதக் கூத்து அல்ல – என்றே பெரும்பாலோரால் கருதப் பட்டது. துரதிருஷ்டவசமாக நேர்ந்துவிட்ட தொல்லையென்றும், அமைதியான மனித வாழ் விற்கிடையே தற்காலிகமாக நேர்ந்துவிட்ட தடை என்றுமே கருதப்பட்டது. ஆனாலும், மனித வாழ்வையும் குறிக்கோளையும் பொறுத்த மட்டிலும் பாதுகாப்பு உணர்ச்சி அழிந்து படாமல் நிலைபெற்றது; காரணம் சமுதாயத் தின் அடித்தளத்திற்கு ஆபத்தில்லாமல் இருந் ததுதான்.

சமீப காலத்தில் ஏற்பட்ட அரசியல் விளைவு களோ முன்பு தோன்றியவற்றிலும் முற்றிலும் மாறுபட்டவை. குறுகிய காலத்தவையானாலும் குறிப்பிடத்தக்கவை; தவிரவும், இவை எளிதில் புரிந்துகொள்ள முடியாத சமுதாய – அகவியல் அடிப்படையில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள். முதலா லாவதாக வில்சன் அவர்களின் முயற்சியால் உருவாக்கப்பட்ட சர்வதேச சங்கத்தைக் குறிப் பிடலாம்; அது உலக நாடுகளுக்கிடையே ஒரு பாதுகாப்பு முறையாக அமைந்தது. அதன் பின்பு, பாசிஸ அரசுகளின் கூட்டுறவைக் குறிப்

பிடலாம். அவைகள் தகர்த்துப் போட்ட ஒப்பந்தங்களும்; மனிதத்தன்மைக்குப் புறம்பாகவும் இளைத்த நாடுகளுக்கு எதிராகவும் செய்த வன்செயல்களும் புன்செயல்களும் மறக்க முடியாதவை. அந்த அரசுகளின் இழிந்த செயல்களால் பொதுவான பாதுகாப்பு முறையே மணல் வீடுபோல சரிந்தழிந்தது; அவற்றின் பின் விளைவுகளை இன்றுங்கூட முழுமையாக கணித்துவிட முடியாது. அவை வல்லரசுகளால் விளைவிக்கப்பட்டவை என்பதைவிட, தோற்றுத் துவண்டு விழுந்த நாட்டுத் தலைவர்களுடைய உறுதியற்ற, பொறுப்பற்ற தன்மையே காரணம் என்று கூறுவதே பொறுத்தமுடையதாகும். அன்று குடியாட்சி நிலவிய நாட்டுத் தலைவர்களெல்லாம் பொதுநோக்கம் மறந்த சுயநலவாதிகளாக நின்ற காரணத்தாலேயே பாசிஸ அரசுகளுக்கு எதிர்த் தாக்குதல் தரமுடியாமல் போயிற்று; அந்தப் போக்கு இன்றும் வெளிப்படையாக நின்று நிலவுகிறது என்பதும் உண்மையே.

எதிலும் கேடும் கெடுதலுமே காணும் பண்புடையவனின் கருத்திலுங்கூட தோன்ற முடியாத அவ்வளவு மோசமான நிகழ்ச்சிகள் சமீப காலத்தில் நடைபெற்றுள்ளன. இன்று ரைன் நதிக்குக் கீழ்த்திசையில் வாழும் ஐரோப்பியர், அவர்களுடைய அறிவை உரிமையோடு உபயோகிக்க முடியாதவர்களாக இருப்பதைக் காண்கிறோம். அந்நாட்டு மக்கள், ஆட்சி

ஆதிக்கம் பெற்றவர்களால் அச்சுறுத்தப்பட்டுக் கிடக்கிறார்கள்; இளைஞர்களெல்லாம் பொய்யுரைகளால் மயக்குண்டு நடக்கிறார்கள். பெருமையூட்டிப் பேசப்படும் அந்நாட்டு அரசியல் வீரச் செயல்களால் உலகம் ஆச்சரியமும் அதிர்ச்சியும் கொண்டு பார்க்கிறது. இந்த நிலைமையை எண்ணும்போது, மனிதனுடைய தனி உரிமையையும் அரசியல் விடுதலையையும் வேண்டி கடந்த தலைமுறையினர் செய்த அளவு தியாகமும் போரும் செய்யக்கூடிய ஆற்றல் இன்றைய தலைமுறையினர் பெற்றிருக்கவில்லை என்றே எண்ணத் தோன்றுகிறது.

இந்த இரங்கத்தக்க நிலைமையை நான் உணருகின்ற காரணத்தால், வாழ்வின் ஒவ்வொரு விஞடியும் இருளடைந்தே காணப்படுகிறது. பத்தாண்டுகளுக்கு முன்பு என்னிடம் குடிகொண்டிருந்த புதிய நினைவுகளெல்லாம் என்னிடம் புகலிடம் பெற்றிருக்கின்றன. அன்று எழுதிய அந்த வார்த்தைகளை இன்று மீண்டும் மீண்டும் படிக்கும்போது இந்த உணர்ச்சியே என்னை இறுகப் பிணிக்கிறது.

இருந்தபோதிலும் ஒரு உண்மையை மட்டும் நான் தெளிவாக உணருகிறேன். மனிதன் ஏதும் பிரமாதமான மாறுதலுக்கு உட்பட்டுவிடவில்லை என்பதுதான். புதிய சூழ்நிலைகளுக்கிடையில் மனிதன் முன்னிலும் வேறுபட்டிருப்பதாகக் காட்சி தந்த போதிலும்,

கணிக்க முடியாத அளவு சோகச் சுமையால் இன்று அமிழ்த்தப்பட்டு நிற்கின்றபோதிலும், அவனிடம் கருதத்தக்க அளவு மாறுதல் ஏதும் ஏற்பட்டுவிடவில்லை. எதிர்காலச் சந்ததியார் காணும் வகையில் எஞ்சி நிற்கக்கூடியவையெல்லாம், முந்திய சந்ததியார் செய்துவிட்ட மூடச் செயல்களும் அவற்றின் சோக விளைவுகளையும் விவரிக்கும் ஒரு சில வரலாற்று ஏடுகளே தவிர வேறல்ல!

# ஏன் வேண்டும் சோஷலிசம்?

பொருளாதார, சமுதாயத் துறைகளிலே சிறப்பான அறிவு பெருத ஒருவரை அழைத்து சோஷலிசம் பற்றிப் பேச அழைப்பது சரியா என்ற சந்தேகம் எவருக்குமே எழக்கூடும். ஆனல் அது சரி என்பதே என்னுடைய கருத்து. அதற்குப் பல காரணங்களைக் கூறமுடியும்.

முதலில் இந்த வினவை அறிவியல் அடிப் படையில் கவனிப்போம். இந்தப் பிரச்சினையை ஆராய்ந்தறியும் தன்மையைப் பொறுத்த மட்டி லும், வானியல் துறைக்கும் பொருளாதாரத் துறைக்கும் அடிப்படையான வேற்றுமைகள் இல்லை என்றே தோன்றும். இவ்விரு துறைகளி லும் வல்லுநர்கள், குறிப்பிட்ட சிலபல நிகழ்ச்சி களை உட்கொண்டு அவற்றின் பொதுவிதிகளைக் கண்டறிகிருர்கள். அதன்பின்பு அவற்றிற்கு உள்ள தொடர்புகளையும் வரையறுத்துக் காட்டு கிருர்கள். ஆனல் நடைமுறையில், ஆராயும்

தன்மைகளை ஒட்டியும் வேறுபாடுகள் இருப்பதைக் காண முடிகின்றது. பொருளாதாரத் துறையில் ஒரு பொது விதியைக் கண்டறியும் போது ஒரு பெரிய தொல்லை எதிர்ப்படுகின்றது. குறிப்பிட்ட பொருளாதார நிகழ்ச்சிகள், பல உண்மைகளால் உருவாக்கப்படுகின்றன. குறிப்பிட்ட ஒன்றினுல்தான் இப்படிப்பட்ட நிகழ்ச்சி ஏற்பட்டது என்பதைக் கண்டறிந்து அதனை எல்லா சூழ்நிலைகளுக்கும் பொதுவான உண்மை என்று கூற முற்படுவது பெரும் தவருக முடியும். தவிரவும், மனித சமுதாயத்தினுடைய நாகரிக காலம் முதற்கொண்டு ஏற்பட்ட அனுபவ அறிவுத் தொகுப்பும் பொருளாதார நிகழ்ச்சிகளுக்கு பெரும்பாலும் காரணமாகி நிற்கிறது. அப்படிப்பட்ட காரணங்களை பொருளாதாரத் துறைக்கே உரியவை என்று குறிப்பிட முடியாது. எடுத்துக்காட்டாக, வரலாற்றிலே உருவாகி நிலை பெற்ற பல அரசுகள், படைப்பல வெற்றியில் ஏற்பட்டவையே என்பது தெளிந்த உண்மை. வெற்றி பெற்ற மக்கள், வெல்லப்பட்ட மக்களிடையே அதிகாரமும் பொருளாதாரச் சலுகையும் கொண்டவர்களாக இடம் பெற்றுக்கொண்டார்கள் என்பதையும் வரலாறு உணர்த்துகின்றது. நில உரிமைகளை வெற்றி கொண்டவர்கள் தமதாக்கிக் கொண்டார்கள்; அவர்களுள் சிலரையே மதகுருக்களாகவும் பீடமேற்றி வைத்தார்கள். அந்த மதகுருக்கள் அறிவுத் துறையிலே அதிகாரம் பெற்றவர்களான கார

ணத்தால், சமுதாயத்தில் மேல் கீழ் என்னும் வர்க்கப் பிரிவுகளை நிலையான அமைப்பாக்கி ஞர்கள். அப்படிப்பட்ட அமைப்புகளுக்கு நீதி நெறிகளின் பெயரால் மதிப்பும் உயர்வும் ஊட்டி ஞர்கள். மக்களும் ஆழ்ந்தெண்ணும் நினைவற்ற வர்களாக அவற்றை மதித்து வாழ்வதைச் சமுதாயப் பழக்கமாக்கிக் கொண்டனர்.

வரலாற்றுப் பாதையை எண்ணிப் பார்க்கும்போது Thorstein Veblen என்பார் குறிப்பிட்ட கொள்ளையடித்துப் பிழைக்கும் கட்டத்தினை (The Predatory phase) மனித சமுதாயம் கடந்துவிட்டதாகக் கூற முடியவில்லை. இன்று நாம் காணக்கிடைக்கும் பொருளாதார உண்மைகள் அந்த.......கட்டத்திற்கு உட்பட்டவையே. நாம் கண்டறிந்துள்ள பொருளாதார விதிகளும் அதனைத் தவிர்த்த வேறு சமுதாய வளர்ச்சிக் கட்டங்களுக்கு உரியவை என்று கூறவும் வழியில்லை. மனித சமுதாயம் அந்த கொள்ளையிடும் கட்டத்தைக் கடந்து மேல் செல்ல வேண்டும் என்பதே உண்மையான சோஷலிசக் கருத்தின் உள்நோக்கம். ஆகவே, இன்றுள்ள பொருளாதாரத்துறை அறிவு, அதன் குறையைத் தவிர்த்து மேற்சென்று சோஷலிச அமைப்பை அடைய வழிசெய்யும் என்று கருத வழியில்லை.

இரண்டாவதாக, சோஷலிசம் என்பது சமுதாய அறநெறியை நோக்கிச் செல்ல

வேண்டும் என்னும் குறிக்கோளையுடையது. அறிவியல் குறிக்கோளை உருவாக்கும் இயல்புடையது அல்ல; அப்படிப்பட்ட குறிக்கோள்களை மனித அறிவில் ஏற்றிவிடும் தன்மையுடையவையும் அல்ல. அறிவியல் செய்யக்கூடியதெல்லாம், அத்தகைய முடிவுகளை – குறிக்கோள்களை அடையும் வழிவகைகளைக் காண்பிப்பதே யாகும். சமுதாய அறநெறிக் கொள்கை வல்லுநர்கள், அப்படிப்பட்டச் சிறந்த இலட்சியங்களைக் கண்டெடுத்துத் தந்தார்கள். அவைகள் உயிரும் ஆற்றலும் உள்ளவை என்ற காரணத்தால் அவற்றை அடையும் முயற்சியையும் மேற்கொண்டார்கள். அவர்களுக்குப் பின்வந்த மக்களும் அவற்றின் பயனும் முடிவும் தெளிய உணராவிட்டாலும்கூட, மெல்ல மெல்ல சமுதாய மாற்றத்திற்கான வாய்ப்புகளைச் செய்து வருகிறார்கள்.

இந்தக் காரணங்களை உட்கொண்டு, நாம் சற்று எச்சரிக்கையோடு நடந்துகொள்ள வேண்டியுள்ளது. அதாவது, அறிவியலும் அறிவியல் முறைகளும் மனிதனுடைய பிரச்சினைகள் முழுவதற்குமே பரிகாரமாக நிற்கும் என்று முடிவுகட்டிவிடக்கூடாது என்பதுதான். தவிரவும், வல்லுநர்கள் சிலர் மட்டுமே சமுதாய அமைப்புக்கும் கட்டுக்கோப்புக்கும் உரிய கருத்துக்களைச் சொல்ல அருகதை உடையவர்கள் என்று எண்ணிவிடவும் கூடாது.

இன்று மனித சமுதாயத்தின் அடித்தளம் ஆட்டம் கொடுத்திருப்பதாகவும், அது ஒரு ஆபத்தான கட்டத்தில் நிற்பதாகவும் பலரால் கூறப்பட்டு வருகிறது. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தையோ குழுவையோ சார்ந்த தனிப்பட்டவர்கள் சிலர், அவற்றின் அமைப்பையும் கட்டுக்கோப்பையும் பற்றி கவலைப்படாமலோ அல்லது எதிர்த்துப்பேச முற்படுவதோ நடைமுறையாகி விட்டது. இதனை விளக்கும் வகையிலே ஒன்றை மேற்கோளாகக் காண்பிக்க விரும்புகிறேன். சமீபத்தில் நான் ஒரு அறிஞரோடு பேசிக்கொண்டிருந்தேன். அவர் வறுமையின் வேதனையில் சிக்குண்டவர் அல்ல ; வளவாழ்வும் உடையவர் என்பதையும் நீங்கள் நினைவுகொள்ளவேண்டும். நேரக்கூடிய இன்னொரு போரைப் பற்றியும், அதனால் மனித இனத்தின் வாழ்விற்கே ஏற்படக்கூடிய ஆபத்தைப் பற்றியும் குறிப்பிட்டுவிட்டு உலகப் பொது அரசு போன்றதொரு அமைப்பு ஏற்பட்டாலொழிய இந்த ஆபத்தைத் தடுக்க வழி இல்லை என்பதையும் எடுத்துக்காட்டினேன். அதை முழுமையாகக் கேட்டுக்கொண்டிருந்த அந்த அறிஞர், "மனித இனம் அழிந்து போவதைத் தடுக்க ஏன் இவ்வளவு அக்கறை காட்டுகிறீர்கள் ?" என்று மிக அமைதியான குரலிலே கேட்டார்.

ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வரையிலும் இப்படிப்பட்ட கருத்தை இவ்வளவு சாதாரண

மாகக் கூற எவரும் துணிந்திருக்கமாட்டார் என்று நினைக்கிறேன். இப்படிப்பட்ட ஒரு கருத்தறிவிக்கும் மனிதனுடைய போக்கு என்ன என்பதை நாம் உணரமுடியும். அல்லலும் அவதியும் மிக்க உலகில் அவற்றைத் தவிர்க்க வழி தேடி, முயன்று, முடிவாக வெற்றிபெற முடியும் என்ற நம்பிக்கையை இழந்துவிட்ட நிலையையே அந்தக் கருத்து தெரிவிக்கிறது. நெஞ்சம் புழுங்கி, ஆதரவற்றவர்களாக அவரைப்போல நிற்பவர்கள் இன்னும் உலகில் பெரும்பாலோர் உள்ளனர். அதற்கு உண்மையான காரணம் என்ன? மனித முயற்சிக்கு உட்பட்ட வழிவகை ஏதாகிலும் உள்ளனவா?

இப்படிப்பட்ட கேள்விகளை எழுப்புவது சுலபம்; ஆனால், அவற்றிற்குப் பயனுள்ள பதில் அளிப்பது கடினமே. இருந்தாலும், என்னால் இயன்ற அளவு இவற்றிற்குப் பதில் அளிக்க முயல்கிறேன். இந்தப் பிரச்சினையில் நமது எண்ணங்களும், மேற்கொள்ளப்படும் முயற்சிகளும் முரண்பட்டவைகளாகவும் புரியாதவைகளாகவும் இருக்கின்றன: தவிர உணர்ந்தவற்றை உணர்ந்தபடி சொல்லுவதிலும் புரியவைப்பதிலும்கூட கடினத்தன்மை இருக்கிறது. இவ்வளவையும் நான் உணர்ந்திருந்தும் என்னால் முடிந்தவரை பதில் சொல்ல விரும்புகிறேன்.

மனிதன் தனிப்பட்டவன் என்பதும், அதே சமயத்தில் சமுதாய அங்கத்தினன் என்பதும்

உண்மையே. தனிப்பட்டவன் என்ற வகையில் மனிதன், அவனுடைய தற்காப்பிலும் அவனைச் சார்ந்த உற்றார் உறவினர்களுடைய பாதுகாப்பிலும் பெரிதும் அக்கறை காட்டுகிறான்; அவனுடைய விருப்பு வெறுப்புகளைத் தணித்துக் கொள்வதிலும், அவனுள் பொதிந்துகிடக்கும் திறமைகளை வெளிப்படுத்துவதிலும் முயற்சி கொள்ளுகிறான். சமுதாய அங்கத்தினன் என்ற வகையில் மற்ற மனிதர்களின் நல்வாழ்விலே பங்குகொள்ளவும், அவர்களுடைய அல்லலின் போது ஆறுதல் கூறவும் அவர்களுடைய வாழ்க்கை நிலைமையை முடிந்தவரை சீர்செய்யவும் முயல்கிறான்; அந்த வகையில் அவனை அறிமுகப்படுத்திக்கொள்ளவும் ஆசைப்படுகிறான். இப்படி ஒன்றுக்கொன்று முரண்பட்ட – மாறுபட்ட நினைவுகளும் செயல்களுமே மனிதனுடைய விநோதமான நடத்தைகளுக்கு அடிப்படையாக அமைகின்றன. இந்த அக முரண்பாடுகள் எந்த அளவுக்கு இணங்கி இணைந்து செயல்படுகின்றனவோ, அதனைப் பொறுத்ததே அவனுடைய மன அமைதியும், பண்பும் ஆகும். அப்படி வளர்ந்த மனப்பக்குவத் தன்மையைப் பொறுத்ததே அவன் சமுதாயப் பொதுநலனுக்கு வழங்கும் உதவியின் அளவு ஆகும்.

எந்த வகையிலும் தொடர்புகொண்டு நிற்கும் இவ்விரு அகச் சக்திகளும் பாரம்பரியச் சொத்துகளே. ஆனால் அவற்றை அடிப்படை

யாகக் கொண்டபோதிலும் அவன் எப்படிப் பட்ட மனிதனுக உருக்கொள்கிறுன் என்பது அவனுடைய வளர்ச்சிச் சூழ்நிலையைப் பொறுத் தது. அதாவது, எப்படிப்பட்ட சமுதாய அமைப்பிலே அவன் வாழ்கிறுன், எந்தெந்த கட்டுக்கோப்புக்குள் வளர்கிறுன், அந்த சமுதா யத்தில் பழக்க வழக்கங்கள் எவை – ஆகிய இவற்றையெல்லாம் பொறுத்து அவன் 'உருக்' கொள்கிறுன். 'சமுதாயம்' எனப்படுகின்ற (abs- tract) கருச்சொல்லானது, அவனுக்கும் அவ ளேடு வாழும் மற்ற மனித இனத்தவர்களுக்கும் மட்டும் அல்லாமல், மாண்டு மறைந்துபோன மூதாதையர்களுக்கும் உள்ள நேர்முக மறைமுக உறவுகளை உட்கொண்டுள்ளது. மனிதன் தனிப் பட்டு எண்ணவும், உணரவும், முயலவும், செயல் படவும் திறம்படைத்தவன் என்பது உண்மை; ஆனுல் அவனுடைய உடல்நிலைப்பாடும், அறிவு அக வளர்ச்சியும் சமுதாயத்தோடு மிகமிக நெருக்கமான உறவு கொண்டவை; உண்மை யில் பிரித்துணர முடியாத அளவிற்கு ஒன்று பட்டு நிற்பவை. 'சமுதாய'மே மனிதனுக்கு உணவையும், உடையையும், தொழில் செய்யக் கருவிகளையும், மொழியையும், எண்ணத்தையும் கருத்தையும் தருகிறது. அந்த தனி மனித னுடைய வாழ்வு என்பது, 'சமுதாயம்' என்ற சிறு உலகிற்குள் இருக்கின்ற – இறந்துபட்ட கோடிக்கணக்கான மக்களின் உழைப்பையும்

அதன் பலன்களையும் உட்கொண்ட ஒன்று. அவை இல்லாமல் அவன் 'வாழ்வு' இல்லை.

ஆகவே, தனிப்பட்டவன் எவ்வகையிலும் சமுதாயத்தைச் சார்ந்து நிற்பது தவிர்க்க முடியாதது; எறும்புகளையும் தேனீக்களையும் போன்று இயல்பானது. ஆனால், எறும்புகள் தேனீக்களினுடைய வளர்ச்சியும் நிலைப்பும், அவற்றின் இயல்பான உள்ளுணர்ச்சியையே பொறுத்தது. மனிதர்களுடைய உறவும் கூட்டமைப்பும் பல்வேறு வகையானவை; மாறுபடும் தன்மையுடையவை. நினைவாற்றலால் பலவற்றைக் கூட்டிப் புதியனவற்றை உருவாக்கும் திறனும் எண்ணியதையும் கண்டதையும் சொல்லால் பிறர்க்கு எடுத்துக்கூறும் ஆற்றலும் – உடலியல் தேவையின் அடிப்படையில் தோன்றும்–உள்ளுணர்வுகளையும் கடந்து செயல்படும் திறமையை மனிதனுக்குக் கொடுத்துள்ளன. இந்த ஆற்றலின் – திறமைகளின் விளைவுகளே பண்பும் பண்பாடும், அமைப்பும் நிறுவனமும், அறிவியலும், பொறியியலும், கலையும் இலக்கியமும் ஆகும். இந்த உண்மை, மனிதன் அவனுடைய விருப்பத்தால், எண்ணும் ஆற்றலால், முயன்ற செயலால் அவனுடைய வாழ்க்கை முறையை ஓரளவிற்கு மாற்றிக் கொள்ள முடியும் என்பதை விளக்குகிறது.

மனிதன், உயிரியல் அடிப்படையின்மீது நிலையான ஒரு உடல் அமைப்பைப் (Biological

அடிச்சுவடே தெரியாத அளவிற்கு மறைந்து விட்டது. இன்றைய மனித இனம், உற்பத்தியை யும் அதனை அனுபவிப்பதையும் பொறுத்து உலக சமுதாயம் ( Planetary community ) என்ற அளவில் வந்து நிற்கிறது என்பது பெரும் பாலும் உண்மையே.

இனி, இன்றைய நெருக்கடியான அடிப் படைக் காரணங்கள் எவை என்பதை இப்போது உங்களுக்குச் சுருங்கக்கூற விரும்புகிறேன். அது தனிப்பட்ட மனிதனுக்கும் அவன் வாழும் சமுதாயத்திற்கும் உள்ள தொடர்பைப் பொறுத் ததேயாகும். தனியொருவன் எல்லா வகையி லும் சமுதாயத்தையே நம்பி நிற்கிறான் என்ற உண்மையை எப்போது இருந்ததையும்விட இப்போது தெளிவாக உணருகிறான். ஆனால், அந்த உண்மையைப் பயனுள்ள ‘தேவை’ என்றோ, ‘அமைப்பு முடிச்சு’ (organic tie) என்றோ, ‘பாதுகாப்பு ஆற்றல்’ என்றோ கருத வில்லை. மாறாக, அவனுடைய உரிமைக்கு – பொருளாதார வாழ்விற்கு ஆபத்து என்று எண்ணுகிறான். தவிரவும், சமுதாயத்திற்குள் அவனிருக்கும் கட்டம், ‘தான்’ என்ற தனித் தன்மையைக் காட்டும் ஆசையை மிகுதிப் படுத்துகிறது ; ஆனால் சமுதாயத்தினுடைய கூட்டுச் சக்தியோ அதனை வலிமையற்றதாக்கு கிறது. எல்லா தனி மனிதர்களும், எந்த நிலைமை யில் இருப்பவர்களானாலும், இந்த தன்மதிப்

பிழக்கும் கட்டத்திற்கு – நிலைமைக்கு இலக்காகி இருக்கிறார்கள். தங்களையும் அறியாமல் அவர்கள் அனைவரும் 'தான்' என்னும் தன்மைக்கு இலக்காகி நிற்பதால் இழப்பு கொண்டவர்களாக அனாதைகளாக காணப்படுகிறார்கள்; வாழ்க்கையின் மகிழ்ச்சியை அனுபவிக்க முடியாதவர்களாகி நிற்கிறார்கள். மனிதன் சமுதாயத்தின் தொண்டனாகத் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் வகையில்தான், அவனுடைய வாழ்க்கைக்குப் பொருளும் பயனும் காணமுடியும்.

முதலாளித்துவ சமுதாயத்தில் நிலைபெற்றுள்ள சீரற்ற பொருளாதார அமைப்பே இன்றைய தொல்லையின் இருப்பிடம் என்று நான் கருதுகிறேன். இன்று, பொருள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள ஒரு பெரிய வர்க்கத்தை நம் முன்பு காண்கிறோம். அவர்கள் ஒவ்வொருவரும் மனித இனத்தின் பலருடைய கூட்டு முயற்சியால் – உழைப்பால் ஏற்பட்ட விளைவுகளைப் பாழடிக்க முயன்றபடி இருக்கிறார்கள். உண்மையில் அந்த முயற்சி சட்ட வரம்பைக் கடக்கவில்லை; சட்டங்களின் வரம்புகளுக்கு உட்பட்டே பலனைப் பறிக்கும் – பாழ் செய்யும் வேலை நடைபெறுகிறது. இதில் உற்பத்திச் சாதனங்கள் – அதாவது சமுதாயத் தேவையையும் நிரப்பி மூலதனத்தையும் தரும் அளவு உற்பத்தியைப் பெருக்கும் உற்பத்திச் சாதனங்கள் அவ்வளவும் சட்டபூர்வமாகத் தனிப்பட்டவர்களின்

கைகளிலே இருக்கின்றன என்பதை நாம் உணர வேண்டும்.

இனி, உற்பத்திச் சாதனங்களின் மீது எவ்வித உரிமையும் இல்லாதவர்களை நான் 'தொழிலாளர்கள்' என்று குறிப்பிட எண்ணுகிறேன். உண்மையில் 'தொழிலாளர்கள்' என்ற சொல் இன்று வழக்கில் உள்ள சொல்லோடு தொடர்புள்ளதல்ல என்றாலும் எளிமையை எண்ணி அப்படியே கூற விரும்புகிறேன். உற்பத்திச் சாதனத்தின் உரிமையாளன் தொழிலாளனின் உழைப்புச் சக்தியை வாங்கும் நிலைமையில் இருக்கிறான். ஆகவே, உற்பத்திச் சாதனங்களின் உதவியைக்கொண்டு தொழிலாளி உற்பத்திச் செய்யும் பொருள்கள் முதலாளிகளின் சொந்தச் சொத்தாகின்றன. இதில் 'மதிப்பு' என்ற வகையில் முதலாளி தொழிலாளிக்குக் கொடுத்ததற்கும், அத் தொழிலாளி உற்பத்தி செய்ததற்கும் உள்ள உறவே நமது கவனத்திற்கு உரியதாகும். உழைப்புக்குக் கூலி (Free Contract) உழைப்புக்கு ஒப்பந்தம் என்ற வகையில் பொருள் உற்பத்திச் செய்யப்படும்போது, தொழிலாளியின் கூலி உற்பத்திச் செய்யப்படும் பொருளின் மதிப்பை யொட்டி நிர்ணயிக்கப் படுவதில்லை. ஆனால், அந்தத் தொழிலாளி குறைந்த அளவு எவ்வளவு கொடுத்தால் போதும் என்று கருதுகிறான் என்பதையும் உழைப்பு தர முன்வரும் தொழிலாளிகளின்

எண்ணிக்கைக்கும் முதலாளிகளின் தேவைக்கும் உள்ள தொடர்பையும் பொறுத்து கூலி நிர்ண யிக்கப்படுகிறது. ஒரு முறைமைக்காகக் கூட உற்பத்தி செய்யப்பட்டப் பொருளின் மதிப்பை அடிப்படையாக எண்ணி கூலியைக் கணக்கிடும் முறை மேற்கொள்ளப்படவில்லை என்பதை நாம் தெளிவாக உணரவேண்டும்.

மூலதனம் தனிப்பட்டவர்களின் கைகளிலே மிகுதியாகக் குவிகின்றது. முதலாளிகளுக்குள் ஏற்படும் போட்டியும் இதற்கு வழிசெய்கிறது; தொழிலியல் முறைகளில் ஏற்படும் முன்னேற் றங்களும் (குறிப்பிட்ட தொழிற் பிரிவினர்களின் எண்ணிக்கை வளர்ச்சியை யொட்டி) பெரிய தொழிலகங்கள் உண்டாவதும் மூலதனக் குவிப் புக்கு வாய்ப்பு தருகின்றன. இதன் விளைவு தனிப்பட்ட மூலதன வளர்ச்சிக்கு ஒருவகை 'பிரபுத்வ' அந்தஸ்தை (Oligarchy in private Capital) அளிக்கிறது. அந்த மூலதனத்தின் ஆற்றலை ஜனநாயக அடிப்படையில் இயங்கும் அரசியலைக்கொண்ட சமுதாயங்களில்கூட காண முடியாது. காரணம், அரசியல் கட்சிகள் இத் தகைய செல்வம் படைத்தவர்களின் பணத்தை உண்டு வளருபவை; கட்சிகளின் சார்பிலே அர சியல் மன்றங்களில் இடம் பெறுபவர்கள், இவ் வகையில், அவர்களுக்கு மறைமுகமாகக் கட மைப்பட்டவர்கள். மன்றங்களிலே இடம்பெறும் பிரதிநிதிகள் மக்களில் ஒதுக்கப்பட்ட, நடுத்தர

கீழ்த்தர மக்களின் நலனுக்குப் பாதுகாப்பளிக்கும் வகையில் பணி செய்வதில்லை. தவிரவும், முதலாளிகள் இன்றைய அரசியல் அமைப்பில் நேரடியாகவோ மறைமுகமாகவோ செய்தி நிறுவனங்களை தமக்கு அடிமைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். செய்தித்தாள்கள், வானொலி, கல்வி இவையனைத்தும் அவர்களுடைய மூலதனத்தின் விளைவே. இந்த நிலையில் தனிப்பட்ட ஒரு குடிமகன், தினநடவடிக்கைகளை ஆராய்ந்து சரி தவறு என்பதை உணர்வது பெரும்பாலும் இயலுவதில்லை; அவனுடைய அரசியல் உரிமைகளைச் சரிவர பயன்படுத்தவும் முடிவதில்லை.

தனிப்பட்டவர்கள் மூலதனத்தின் உரிமையாளர்களாக இருக்கின்ற பொருளாதார அமைப்பில், இரண்டுவித நிலைமைகள் இருப்பது தவிர்க்க முடியாதது. முதலாவது, உற்பத்திச் சாதனம் அல்லது மூலதனம் தனிப்பட்டவருடையது; அதை விருப்பப்படி முதலாளி பயன்படுத்த முடியும். இரண்டாவது, உழைப்புக்கு ஏற்படுத்தப்படும் கூலி ஒப்பந்தம் (உற்பத்தியோடு எவ்வகைத் தொடர்பும் இல்லாமல்) தனிப்பட்டது. இங்கே, முழுக்க முழுக்க முதலாளித்துவச் சமுதாயம் இன்று இல்லையே என்று கூறக்கூடும். தொழிலாளர்கள் எவ்வளவோ காலமாக முயன்றும் போராடியும்கூட "உழைப்பை விரும்பியபடி விற்கலாம்" (Free labour Contract) என்ற நிலைமை வந்ததே தவிர

வேறு எந்த மகத்தான மாறுதலும் ஏற்பட வில்லை. அதுவும் சிலவகையான தொழில் களுக்கே 'உழைப்பை விரும்பியவாறு விற்க உரிமை' ஏற்படுத்தப்பட்டுள்ளன. மொத்த நிலைமையை எண்ணிப்பார்த்தால் 'முழு' முத லாளித்துவ சமுதாயம் (Pure Capital Society) என்பதிலிருந்து இன்றைய நிலைமை அதிக மாறுதல் அடைந்ததாகக் கூறமுடியாது.

உற்பத்தி என்பது இலாபக் குறிக்கோளைக் கொண்டதே தவிர பயனை அடிப்படையாகக் கொண்டது அல்ல. விருப்பப்பட்டவர்களுக்கும் உழைக்க முடிந்தவர்களுக்கும் உழைப்பதற்கான வாய்ப்பு தரப்படவேண்டும் என்ற சட்டதிட்டங் கள் இல்லை. வேலை தேடும் பட்டாளங்கள் எப் போதுமே நிலையாக இருக்கின்றன. வேலை செய் யும் தொழிலாளியும், இருப்பதையும் இழந்து விடுவாஞே என்ற அச்சத்திலேயே வாழ்கிருன். வேலையில்லாதவர்களும் கூலி குறைவாகப்பெற்று வாழும் தரித்திரர்களும் வாழும் சமுதாயம், இலாப விற்பனைக்கு ஏற்றது அல்ல; ஆகவே பொருள்களின் உற்பத்தி குறைக்கப்பட வேண் டும்; தடைப்படுத்தப்பட வேண்டும். இதன் விளைவுகள் அனைவரும் உணர்ந்தபடி விபரீத மானவையே. புதுப்புது தொழிலியல் முறைகள் அனைவர்க்கும் வேலை தருவதற்குப் பதில் இருப் பவர்களையும் வேலையிழக்கச் செய்யவே உதவுகின் றன. இலாபக்குறியும், முதலாளிகளின் போட்டி யும் மூலதனக் குவிப்புக்கும் அதைப் பயன்படுத்

தும் வாய்ப்புக்கும் இடையூருக நிற்கின்றன;
பொருளாதாரச் சீரழிவுக்குக் காரணமாகின்
றன. அளவுகடந்த முதலாளித்துவப் போட்டி,
பெருத்த அளவு உழைப்புச் சக்தியையும்
பாழாக்குகிறது. அதுவே, நான் முதலில் கூறிய
படி, மனிதனுடைய மனவளத்தையும் அமைதி
யையும் குலேக்கிறது.

தனிப்பட்ட மனிதர்களே, பறிகொடுத்த
வர்களைப் போல பரிதவிக்கவிடும் முதலாளித்துவ
விளைவு மிகமிகக் கொடுமையானது. நமது
கல்வித் துறையே இந்த முறைக்கு – இந்தக்
கேட்டுக்கு இலக்காகித் தொல்லேப்படுகிறது.
போட்டியிடும் போக்கையே உபதேசமாக
ஏற்கும் மாணவன் எதிலும் வெற்றியையே
வழிபாடாக்கிக் கொள்ளுகிருன்.

இப்படிப்பட்ட தொல்லேகளைப் போக்க
ஒரே ஒரு வழி சோஷலிச அமைப்பை ஏற்
படுத்துவதே என்று நான் தெளிவாக நம்பு
கிறேன். அதனேடு சமுதாய நலத்தில் நாட்டம்
ஏற்படச் செய்யும் கல்வியறிவையும் புகட்டுவது
அவசியம். அப்படிப்பட்ட சமுதாயத்தில்தான்
உற்பத்திச் சாதனம் சமுதாயத்தினுடைய
பொதுச் சொத்தாகிறது; திட்டமிட்ட வகையில்
பொருள் உற்பத்தியும் நடைபெற வழி இருக்
கிறது. திட்டமிட்ட பொருளாதார அமைப்பு,
அனைவர்க்கும் வேலேயையும் தருவதோடு தேவை
யான அளவு பொருள்களையே உற்பத்திச் செய்

கிறது; எந்த ஆணையும் பெண்ணையும் குழந்தை யையும் வாழும் நிலைமையில் வைக்கிறது. அப்படிப்பட்ட கல்வியறிவும் தனிப்பட்டவனின் அகத்திறன்களை வெளிப்படுத்த வாய்ப்பும், சமுதாயத்தின் மற்ற குடிமக்களுக்குத் தொண்டன் என்ற உள்ளுணர்வை வளர்க்கும் பொறுப்பும் தருகின்றது. தனியொருவனின் ஆற்றலும் வெற்றியுமே பெரிதெனை உபதேசிக்கும் நிலைமையும் மறைகிறது.

இவ்வளவிற்கும் பின்பு இன்னொன்றையும் கூறவேண்டியுள்ளது. திட்டமிட்ட பொருளாதார அமைப்பே சோஷலிசம் என்ற பெயருக்கு உரியதல்ல. திட்டமிட்ட பொருளாதார அமைப்பு தனியொருவனை முழு அடிமையாக வைத்திருக்கக்கூடிய தன்மையையும் உட்கொண்டிருக்கக்கூடும். சோஷலிச அமைப்பை நிலைநாட்டுவது என்பது மிகக் கடினமான சமுதாய-அரசியல் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதிலேதான் உள்ளது. அரசியல் பொருளாதார ஆதிக்கம் சிலரிடம் மிகுதியும் குவிந்துவரும் நிலைமையில் அது எப்படி எளிதாகும்? எப்படி தனிப்பட்டவனின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டு ஏகாதிபத்திய போக்குக்கு எதிர்ப்பை உருவாக்கி நிலைமையை ஈடுபடுத்த முடியும்?

தும் வாய்ப்புக்கும் இடையூருக நிற்கின்றன; பொருளாதாரச் சீரழிவுக்குக் காரணமாகின்றன. அளவுகடந்த முதலாளித்துவப் போட்டி, பெருத்த அளவு உழைப்புச் சக்தியையும் பாழாக்குகிறது. அதுவே, நான் முதலில் கூறியபடி, மனிதனுடைய மனவளத்தையும் அமைதியையும் குலேக்கிறது.

தனிப்பட்ட மனிதர்களே, பறிகொடுத்தவர்களேப் போல பரிதவிக்கவிடும் முதலாளித்துவ விளேவு மிகமிகக் கொடுமையானது. நமது கல்வித் துறையே இந்த முறைக்கு – இந்தக் கேட்டுக்கு இலக்காகித் தொல்லேப்படுகிறது. போட்டியிடும் போக்கையே உபதேசமாக ஏற்கும் மாணவன் எதிலும் வெற்றியையே வழிபாடாக்கிக் கொள்ளுகிருன்.

இப்படிப்பட்ட தொல்லேகளேப் போக்க ஒரே ஒரு வழி சோஷலிச அமைப்பை ஏற்படுத்துவதே என்று நான் தெளிவாக நம்புகிறேன். அதனேடு சமுதாய நலத்தில் நாட்டம் ஏற்படச் செய்யும் கல்வியறிவையும் புகட்டுவது அவசியம். அப்படிப்பட்ட சமுதாயத்தில்தான் உற்பத்திச் சாதனம் சமுதாயத்தினுடைய பொதுச் சொத்தாகிறது; திட்டமிட்ட வகையில் பொருள் உற்பத்தியும் நடைபெற வழி இருக்கிறது. திட்டமிட்ட பொருளாதார அமைப்பு, அனைவர்க்கும் வேலேயையும் தருவதோடு தேவையான அளவு பொருள்களேயே உற்பத்திச் செய்

கிறது ; எந்த ஆணையும் பெண்ணையும் குழந்தை யையும் வாழும் நிலைமையில் வைக்கிறது. அப்படிப்பட்ட கல்வியறிவும் தனிப்பட்டவனின் அகத்திறன்களை வெளிப்படுத்த வாய்ப்பும், சமுதாயத்தின் மற்ற குடிமக்களுக்குத் தொண் டன் என்ற உள்ளுணர்வை வளர்க்கும் பொறுப் பும் தருகின்றது. தனியொருவனின் ஆற்றலும் வெற்றியுமே பெரிதென உபதேசிக்கும் நிலைமை யும் மறைகிறது.

இவ்வளவிற்கும் பின்பு இன்னொன்றையும் கூறவேண்டியுள்ளது. திட்டமிட்ட பொருளா தார அமைப்பே சோஷலிசம் என்ற பெயருக்கு உரியதல்ல. திட்டமிட்ட பொருளாதார அமைப்பு தனியொருவனை முழு அடிமையாக வைத்திருக்கக்கூடிய தன்மையையும் உட்கொண் டிருக்கக்கூடும். சோஷலிச அமைப்பை நிலை நாட்டுவது என்பது மிகக் கடினமான சமுதாய– அரசியல் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதிலே தான் உள்ளது. அரசியல் பொருளாதார ஆதிக் கம் சிலரிடம் மிகுதியும் குவிந்துவரும் நிலைமை யில் அது எப்படி எளிதாகும்? எப்படி தனிப் பட்டவனின் உரிமைகள் பாதுகாக்கப்பட்டு ஏகாதிபத்திய போக்குக்கு எதிர்ப்பை உருவாக்கி நிலைமையை ஈடுபடுத்த முடியும்?

# காலம் மிகமிகக் குறுகியது!

[அணுத்துறை அறிவியல் அறிஞர்கள் வ்ராக்ளாவில் (Wroclaw) கூட்டிய மாநாட்டிற்கு பேராசிரியர் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் அனுப்பிய செய்தி.]

பல்வேறுபட்ட நாட்டு அறிஞர்களும் ஆராய்வாளர்களுமாகிய நாம் வரலாற்று முக்கியத்துவம் படைத்தப் பொறுப்பேற்று இங்கே கூடியிருக்கிறோம். நாம் மிக அவசியமான கருத்தை யுட்கொண்டு கூடியிருக்கிறோம் – ஆம். அறிஞர் பெருமக்களின் நல்லுரை கேட்டு இவ் வுலகில் அமைதி நிலைநாட்டும் கருத்தோடு கூடியிருக்கிறோம். இது இன்றைய நேற்றைய பிரச்சினை அல்ல! பழம் பிரச்சினையே. அறிஞன் பிளாட்டோ இந்தப் பிரச்சினைக்கு வழிவகை காணப் பெரிதும் முயன்றான். மிருக உணர்வு உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டுவிடாமல் பகுத்தறிவின் பயனால் மனிதப் பிரச்சினைகளுக்குத் தெளிவு காண அன்றே முயன்றான்.

ஆனால் நமது நெடுங்கால அனுபவம் இன்னொரு உண்மையைத் தெளிவாகக் கூறியுள்ளது. பகுத்தறிவோடு கூடிய எண்ணம் மட்டும் சமுதாய வாழ்வில் மலிந்துள்ள பிரச்சினைகளைத் தீர்த்துவைக்காது என்பதுதான் அந்த உண்மை. ஆழ்ந்த ஆராய்ச்சியும் அறிவியலை ஒட்டிய செயல்களும் மனித இனத்தைச் சோகத்தின் பிடிப்புக்குள் அடிக்கடி சிக்கவைத்திருக்கின்றன. எந்த கண்டுபிடிப்புக்கள் ஓயாத உழைப்பினின்று மனிதனுக்கு விடுதலை அளித்து அவனுடைய வாழ்க்கைச் சுமையைக் குறைத்து வளத்தையும் சேர்த்ததோ அதே கண்டுபிடிப்புக்கள் அவனுடைய வாழ்வில் அமைதியற்ற நிலைமையையும் ஏற்படுத்தியுள்ளன; அவனை பொறியியல் உலகின் நிரந்தர அடிமையாக்கியிருக்கின்றன. இவற்றிற்கெல்லாம் மேலாக, தன்னினத்தையே கூட்டோடு அழித்துக்கொள்ளும் ஆபத்தான கருவியையும் அவனிடத்திலே ஒப்படைத்துள்ளன. உண்மையில் இதனை தொல்லை விளைத்த துயரத்தின் எல்லைப்புள்ளி என்றுதான் கூறவேண்டும்.

அறிவியல்,பொறியியல் துறையில் வெற்றிப் பெருமிதம் கொள்ளும் வீரர்களைப் பெற்றெடுத்த இம் மனித இனம், நம்மைச் சூழ நிற்கும் அரசியல் பொருளாதாரச் சிக்கல்களைப் போக்கும் திறம் அற்றவர்களாகவே நம்மை நெடுங்காலம் வைத்திருப்பது துயரத்தின் துயர

மாகும். நாட்டுக்குள்ளும் பல நாடுகளுக்கிடை யிலும் நிலவுகின்ற பொருளியல் முரண்பாடு களே இவ்வுலகை அச்சத்திற்கும் ஆபத்துக்கும் உட்படுத்துகின்றன என்பது முற்றிலும் உண்மை. உலக நாடுகள் அமைதியோடு வாழ் வதற்கேற்றதான அமைப்புகளை உருவாக்கும் முயற்சியில் மனிதன் வெற்றியடையவில்லை. கூட்டோடு அழிக்கும் கொலைக் கருவிகள் என் றென்றும் தேவையற்றது எனத்தக்க போரற்ற ஒரு சமுதாய அமைப்பை நிறுவும் வகையிலே வெற்றி காணவில்லை.

அழிவை மிகக்கோரமானதாகவும் முழுமை யானதாகவும் செய்யத்தக்க விதிமுறைகளைக் கண்டுதந்த விஞ்ஞானிகளாகிய நாம், இந்த நிலையில் இயற்றவேண்டிய கடமை ஒன்றுள் ளது. நமது ஒன்றுபட்ட முழு ஆற்றலையும் கொண்டு அழிவுக்குக் கண்டுபிடிக்கப்பட்ட ஆயு தங்களை அதற்குப் பயன்படுத்தாமல் தடுத்தாக வேண்டும். இதனிலும் வேறெச்செயல் இன்றி யமையாதது? இதனைவிட நமது இதயத்தைத் தொடும் சமுதாய இலட்சியம் வேறெது இருக்க முடியும்? அக அடிப்படையிலும் உலக நாடுகளை நாம் ஒன்றுபடுத்தியாக வேண்டும். இவ்வகை யில் ‘நாடுகள்’ என்னும் பெருந்தடைகளையும் கடந்து நின்று நாம் செயலாற்றவேண்டும்.

மனித இனம் சிறுசிறு குழுக்களாக வாழ்ந்த காலத்தில் சமுதாய பொதுநலனுக்கு ஊறு

செய்யும் உரிமைகளை உடைத்தெறிந்து முன்னேறியது உண்மையே. சிறு நகர அல்லது மாநில ஆட்சிக்கு உட்பட்ட சமுதாய வாழ்வில் அது ஓரளவிற்கு நடக்கக்கூடியதே. அப்படிப்பட்ட குழு வாழ்வில் படிப்பும் பழக்க வழக்கங்களும் அளவுக்கு அதிகமான ஆற்றல் பெற்றிராத காரணத்தால் அமைதியான உறவும் நிலவ வழியிருந்தது. ஆனால் வெவ்வேறு நாடுகளுக்கு இடையிலோ நெறிமுறையற்ற நிலைமையே நிலவிற்று; இன்றும் நிலவுகின்றது. இக்குறையைப் பொறுத்த வரையிலும் கடந்த சில ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகவே மனித இனம் எந்தவித முன்னேற்றமும் அடைந்த தாகக் கூறமுடியாது. வெவ்வேறு நாடுகளுக்கிடையில் அடிக்கடி தோன்றும் எல்லா சிக்கல்களும் மிருகபலத்தால் – ஆம், போர் முறையில் தான் முடிவுகட்டப்பட்டு வருகின்றன. மேலும் மேலும் வலிமையுள்ள அரசாக வேண்டும் என்ற அளவுகடந்த ஆசை, வாய்ப்பும் வழியும் கிடைக்கும் போதெல்லாம் வல்லடி வழக்குக்கு விதையூன்றிவிடுகிறது.

உலக நாட்டு விவகாரங்களில் இத்தகைய நெறிகெட்ட முறைகள் முளைத்தெழுந்து மனித இனத்தைச் சொல்லொணு அல்லலுக்கும் அழிவுக்கும் ஆண்டாண்டு காலமாக உட்படுத்தியுள்ளன. மீண்டும் மீண்டும் அவை தோன்றி மனித இனத்தின் நல்வாழ்வையும் அசு

வளர்ச்சியையும் முன்னேற்றத்தையும் தேய்த்து விட்டுப் போகின்றன. சில நேரங்களில் அவ்வாறு இலக்கான இடங்களை அவை மயானபூமியாக்கியுமிருக்கின்றன.

இருந்தபோதிலும் என்றென்றும் போருக்காகக் கச்சைகட்டி நின்ருகவேண்டும் என்று நாடுகள் கொண்டுள்ள ஆவல், மனிதர்களுடைய உயிர்களை விலை கொண்டபடிதான் இருக்கின்றது. கடந்த சில நூற்ருண்டுகளாகக் குடிமக்கள் மீது செலுத்தப்படும் அரசினுடைய ஆதிக்கம் விரிவடைந்தபடியே இருக்கிறது. வெளிப்படையாக அரசின் ஆதிக்கத்தை மிகுதிப்படுத்திக்கொள்ளும் நாடுகள் சில உள்ளன. மற்ற நாடுகளில் மறைமுகமாக குவித்துக் கொள்ளப்படும் அரசாங்க அதிகாரம் எவ்வகையிலும் முன்னதில் குறைந்ததுஅல்ல. அமைதியும் நல்லுறவும் கொண்டு மக்களை வாழவைக்க எந்த அரசாங்கமும் இன்று அரும்பாடு படவேண்டியுள்ளது. காரணம், நவீன தொழில்துறை குவிப்பும், அதனையொட்டி ஏற்பட்டுள்ள நிறுவன அமைப்பும் அத்தகைய சிக்கல்களுக்கு வித்தூன்றியுள்ளன.

புறப்பகைவர்களின் தாக்குதலில் இருந்து நாட்டு மக்களைக் காக்கும் பொருட்டு ஒரு நாட்டரசாங்கம் படைப்பலத்தைப் பெருக்கி வைத்துக்கொள்ள வேண்டியுள்ளது. தவிரவும் போர் முறைகளைப் பற்றிய பலதுறை அறிவை

யும் மக்களுக்கு ஊட்டுவதையும் கடமையென்று அது கருதுகிறது. அப்படி ஊட்டப்படும் அறிவு இளைஞர்களின் நல்லறிவையும் நெஞ்சையும் பாழ்படுத்துவதோடு முதியவர்களின் மன நிலையையும் கெடுக்கிறது. எந்த நாட்டரசும் இவ்வித 'பாழாக்கும் படல'த்திலிருந்து விடு பட்டு வாழமுடியாது. அரசாங்கத்தின் வரம்பு கடந்த ஆதிக்க வளர்ச்சியை வெளிப்படையாகக் கண்டிக்கும் உரிமை பெற்ற நாடுகளிலும் இந்த நிலைமை இருக்கத்தான் செய்கிறது. இதனால் அரசாங்கம் ஒருவகை தெய்வச்சிலையாகவே மாறி நிற்கிறது; அதனுடைய சொல்லாதிக்கத் திற்குத் (Suggestive power) தலைதாழ்த்தாமல் உரிமையோடு நினைக்கும் திறன் படைத்த வர்கள் மிகச் சிலரே.

போருக்கென்றே அறிவு ஊட்டுவதும் அதற்கு ஆயத்தமாவதும் இன்றைய நிலையில் பொருளற்றது. கடந்த சில ஆண்டுகளில் ஏற்பட்டுள்ள பொறியியல் வளர்ச்சி இராணுவ அமைப்பில் புதியதொரு சூழ்நிலையைத்தோற்று வித்துள்ளது. சில விநாடிகளுக்குள் மிகப் பரந்த நிலப்பரப்பைப் பாழ்செய்து எண்ணற்ற மனித உயிர்களைக் கொன்று குவிக்கும் ஆற்றல் படைத்த கொடிய போர்க் கருவிகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அத்தகைய கருவிகளின் அழிவிலிருந்து பாதுகாப்பு அளிக்கத்தக்க எதை யும் அறிவியல் இன்றுவரை கண்டுபிடிக்காத

காரணத்தால், எந்த அரசாங்கமும் அதன் குடி மக்களுடைய பாதுகாப்புக்கு உறுதியளிக்க முடியாது.

நிலைமை இதுவாகும்போது வேறெவ்வகையில் நாம் பாதுகாக்கப்பட முடியும்?

கற்பனைக்கும் எட்டாத இந்த அழிவினின்று மனித சமுதாயம் காப்பாற்றப்பட வேண்டுமாளுல் பலநாட்டு அரசாங்கங்களுக்கும் மேற்பட்ட பொது அமைப்பு (Supranational Organisation) ஒன்றினிடம் போர்க் கருவிகளும் அதிகாரமும் ஒப்படைக்கப்பட வேண்டும். இன்றுள்ள நிலையில் போருக்கு அடிப்படையான சிக்கல்களைப் போக்கும் உரிமையும் கடமையும் அப்படிப்பட்ட பொது அமைப்புக்கு வழங்கப் பட்டிருந்தாலொழிய உலக நாடுகள் அதனதன் தனிப்பட்ட அதிகாரங்களை மாற்றித்தரும் என்று கருத இடமில்லை. அப்படி கொடுக்கப் பட்டால் ஒவ்வொரு நாட்டு அரசாங்கமும் அதனதன் உள்நாட்டு விவகாரங்களில் கவனம் செலுத்தும்; பிற நாடுகளைப் பொறுத்த வரையில், சொந்த நாட்டுப் பாதுகாப்புக்கு இடையூறு விளைக்கும் பிரச்சினைகளில் மட்டுமே அக்கறை காட்டும்.

துரதிருஷ்டவசமாக, அத்தகையதொரு புரட்சிகரமான செயல், அவசிய – அவசரத் தேவையாக மனித இனத்தின் முன் இன்று நிற்பதைப் பல நாட்டு அரசாங்கங்களும்

உணர்ந்துகொண்டதாகத் தெரியவில்லே. நம்முடைய இன்றைய நிலைமையோ, இறந்த காலத்தில் என்றென்றுமே ஏற்பட்டிராத ஒரு புதிய நிலைமையாகும். ஆகவே இறந்தகால செயல் முறைகளும் அமைப்புக்களும் இன்று எவ்வகையிலும் பயன் அளிப்பன அல்ல. நமது எண்ணங்களையும் செயல்களையும் புதிய நிலைமைக்கேற்ப அடியோடு நாம் மாற்றிக்கொண்டாகவேண்டும்; இதுவரை உலகு கண்டிராத புதிய உறவுமுறைகளை உலக நாடுகளுக்கிடையில் ஏற்படுத்தும் துணிவையும் நாம் பெற்றுகவேண்டும். நேற்றைய பிரச்சினைகளும் பரிகாரங்களும் இன்றைக்கே பயன்படாத நிலைமை அடைந்துள்ள போது, அவை நாளைக்கு அணுவளவும் பயனற்று நிற்கும் என்பது சொல்லாமலே விளங்கும். இவ்வுண்மையை உலக மக்களுக்கெல்லாம் உணர்த்த வேண்டியது பேரறிஞர்களுடைய தலையாய சமுதாயக் கடமையாகும். உலக மக்கள் அனைவரையும் நெஞ்சில் ஊறிவிட்ட தேசியப் பழக்க வழக்கங்களைப் புறக்கணித்து முழுக்க முழுக்கப் புதிய நோக்குடையவர்களாகச் செய்யும் வகையிலே, குழுமியுள்ள பேரறிஞர்கள் முதலாவது அவரவருடைய தேசிய அரணைக் கடந்து நிற்கும் துணிவையாவது பெறுவார்களா?

இதற்கு ஒன்றுபட்ட பெரு முயற்சி மிக மிகத் தேவை. இப்போது இம் முயற்சித்

தோல்வியுறுமானல், தனிநாடுகளுக்கு மேற்பட்டதான அந்தப் பொது அமைப்பு நாளை உருவாக்கப்படலாம்; ஆனல் அது உலகின் பெரும்பகுதி அழிந்த பின்னர் அந்த அழிவின் மீது கட்டப்பட்டதாகவே இருக்கும். நாமாக வருவித்துக்கொள்ளும் கற்பனைக்கும் எட்டாத இந்த அழிவுக்குப் பின்புதான், உலக நாட்டுப் பிரச்சினைகளையும் தீர்த்துக்கொள்ள முடியும் என்ற நிலை வரவேண்டாம்.

காலமோ மிகமிகக் குறுகியது; நாம் உடனடியாகச் செயல்பட்டாக வேண்டும்.



